உ

கணபதிதுணை.

மதுரைஜில்லாக் காரைக்குடி

மேலவீரன்செட்டி ஊருணிக்

# கற்பகவிநாயகர் பதிகம்,

மேற்படியூர்

# கொப்புடைநாயகி பதிகம்

மும்மணிக்கோவை,

மேற்படியூர்

# பொய்சொல்லாமெய்யர் பதிகம்

நான்மணிமாலை.

---

இவ்வைந்தும்

ஷை காரைக்குடியிலிருக்கும் - மழவராயனேந்தல்

சிதம்பரதிட்சதர் குமாரர்

சதாவதானம்

## வாலசுப்பிரமணிய ஐயரவர்கள்

இயற்றியது.

---

காளையப்பசெட்டியார் குமாரர் —

சுப்பிரமணியசெட்டியாரவர்கள்

வேண்டுகோளின்படி

சின்னையாசெட்டியார் குமாரர்

மெய்யப்பசெட்டியாரவர்களால்

சென்னை

வித்தியாவர்த்தனி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

பிரமாதிஸு புரட்டாசிமீ

உ

கணபதிதுணை.

# கற்பகவிநாயகர் அகவல்.

—*—

பருதிவஞ்சத்திற் பனிமதிக்குலத்தில்
வருமகீபதிகண் மனுநூல்வழியே
செங்கோலோச்சித் திதிபுரிகின்ற
வங்கோமகண்முக மானசீர்மதுரை
நெடியகண்களைப்போ னீடிக்காரைக்
குடிவளர்தேவ கோட்டையூரிரண்டில்
வலதுநேத்திரம்போன் மங்காப்புகழா
னலனுறுவெண்மையு நாளுநீருண்ட
முகிலடைகிடக்கு முறையாற்கருமையும்
புகலரும்பூர்வ புண்ணியத்தவத்தோ
ரியற்றியதிருமட மெல்லாஞ்செவ்வான்
குயிற்றியபான்மைபோற் கோலக்காவி
வத்திரம்புனைந்துக மண்டலந்தாங்கிய
வுத்தமர்வதியு முயர்வாற்செம்மையுங்
குலவியகாரைக் குடியிடைவணிக
ரலகிலாரவரு ளாண்சிங்கம்போற்
சமரிடையெதிர்த்த சார்பிலாரொன்னுங்
கமனத்தந்தி களின்மத்தகத்தைப்

பிளக்குஞ்சினவான் பெரியவர்பேற்றை
யளக்குங்கனவா னன்னோர்க்களிக்கு
மனவான்தனவா னனவான்முதலா
வினவாநின்ற மெய்க்கடவுளர்க்கு
வாரியையுறுஞ்சும் வடவாக்கினிபோ
லேரியையுடைக்கு மிருங்கானதிபோல்
வரையைத்தகர்க்கும் வச்சிரப்படைபோ
லிரையைக்கலக்கு நீள்வரிப்புலிபோற்
றுன்பைப்புரியுஞ் சூரனுதியரை
மின்பெற்றிலகும் வேலாயுதத்தா
லோரிமைப்போழ்தி லுயிரும்மெய்யும்
பாரிடைநெடுநாட் பண்புடனிருந்த
வண்ணனுந்தம்பியு மவ்வவர்மனைவியர்
பண்ணும்யுத்தத்தாற் பண்பிலராகிப்
பிரியுந்தரம்போற் பிரியச்செய்யுந்
தரியலர்கேசரி தழைசிறைச்சிகண்டி
மலையான்றன்னை வணங்குமன்புடையோர்
மலையாவண்ணம் வைத்திடுங்கடவுள்
பன்னுநான்மறையின் பழம்பொருள்பொருளிற்
றுன்னிப்பொலிவே தோன்றுஞ்செழுஞ்சுட
ரயிற்படைதாங்குமென் னய்யன்பொய்யா
வெயிற்பணியணிந்த மெய்யன்றுய்ய
பவளமேனியனுமை பாலகன்சேந்தன்
குவளைநேர்கருங்கட் குஞ்சரிகாந்த

னிணையடிமறவா வியல்பினர்க்கேவற்
பணிபுரிந்தோங்கிய பத்திமானென்றும்
பாதரக்குடியாம் பதியிடைமேவிக்
கோதிலாச்சத்துவ குணவடிவான
தேசிகனடிசிந் தித்தவராலுப
தேசமும்பெற்றுச் செழித்தமால்கமலை
நடித்தகல்வாச னட்டினையாத்தக்
குடிவளனுயர்ந்த குலசேகரபுர
மாசகலிரணியூர் மருதங்குடியாம்
ராசநாரா யணபுரஞ்சிறந்த
பிள்ளையார்பட்டிப் பெருந்திருவேட்பூ
ருள்ளவனுதலி யுண்டவன்போலக்
கற்றிடுங்கல்விக் களஞ்சியஞ்சுதனைப்
பெற்றதாலடங்காப் பெற்றியுநிறைந்தோன்
கோதில்நல்ல குப்பான்செட்டி
நீதிமானுன நிருபனீன்றருளுஞ்
சேய்வீரப்ப செட்டிநரேந்திரன்
பாய்வேகத்தின் பரிநடாத்தியவே
ளன்பாற்செய்யு மறம்பலவற்றுட்
பொன்பாவியமனைப் பூவும்பூத்துப்
பொன்னியும்யமுனையும் பொதியைத்தாம்பிர
வன்னியுங்கங்கையு மாநதிபலவு
மீதெனக்கண்டவ ரியம்பத்தெளிவுந்
தீதிலாவுருசியுஞ் சேர்ந்துயர்வாகக்

குலவியமேலைக் குளமேல்கரையி
லிலகியகற்பக மென்னுந்தந்தி
வதனத்தெந்தை மலர்த்தா
ணிதமுத்தமர்க ணிலைக்குமோரிடமே

கற்பகவிநாயகர் அகவல் - முற்றிற்று.

---

உ

சிவமயம்.

கற்பகவிநாயகர்பதிகத்தின்

# சாத்துக்கவி.

---

இஃது

வேம்பத்தூர் சங்கவித்துவான்களி லொருவராகிய

ம-ா-ா-ஸ்ரீ

## சுப்பையரவர்களியற்றிய

வெண்பா.

வாலைக் குளமகிழு மைந்தனுங் காரைநகர்
மேலைக் குளமார் விநாயகன்மேற்—சீலப்
பதிகமொன் று செய்தானற் பாலசுப்ர மண்யன்
றுதிபெறவிப் பூவுலகத் துள்.

---

உ

கணபதிதுணை.

# கற்பகவிநாயகர் பதிகம்.



## காப்பு.

நேரிசைவெண்பா.

நேயமொடு மேல்வாவி நீள்கரைமுன் னேனை
நாயகன்மேற் பாடல்பத்து நான்கூறத்—தூயமறை
நாலுமந்த மாகவப்பா னண்ணிப் பெருங்கருணை
காலுமந்த மாகளிறே காப்பு.

## நூல்.

மதியணிசெஞ்சடிலரக மகிழவோங்கும்
வரமதில்வந்தவதரித்திம் மாநிலத்தோர்
துதிசெயவேகயமுகவ சுரன்பிராணன்
றுடிதுடிக்கவொருநொடிமெய் துணித்தெந்நாளும்
புதியநறவிழிமலர்ப்பூங் காவனஞ்சூழ்
பொன்னுலகைப்புருகூதன் புரக்கச்செய்து
கதியுதவுபிரணவத்தை மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (க)

புவியதனிலோயாத்திவினையினுலே
பொல்லாதசனனமெடுத் துழன்றுபொன்றும்
குவிந்தியமுடையகுலா மனைக்கொண்டாடிக்
கோதனுகாக்கவிபாடிக் குறைவுறுமற்

றிவியமகமேருவரை யனையமேனிச்
செழுஞ்சுடரைப்புலவர்குழாந் தினமன்பாற்செய்
கவிமலர்மாலிகைபுனைந்த மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (௨)

நனவிடையனவரதமு மனைவிமக்க
ணலந்திகழ்தாய்தந்தையென நயந்தெந்நாளுஞ்
சனனமெடுத்திறுமளவுங் கொடியதான
சாண்வயிற்றின்பொருட்டுலகிற்சஞ்சரித்து
மனமழலின்மெழுகினுரு காமலென்னை
மகிழ்ந்தாண்டமலர்த்திருமான் மருகன்றன்னைக்
கனவிமயமயின்மகனை மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (௩)

பந்தவினைத்தொடர்பகன்ற முனிவோரோதும்
பரஞ்சுடரைக் கருணைவிழி பாலித்தோங்குந்
தந்தநெடுங்கரவளத்தந் தாவளத்தைத்
தனிமுதலைக்கனிவினொடு தமியேன்முன்பு
வந்தருடந்திலகுபரா னந்தமான
வத்துவையென்மனவனச மலரின்மேவுங்
கந்தலர்ப்பதத்திறையை மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம் (௪)

மடமையெனுங்கொடியநெடு வலையிற்சிக்கி
வருந்திமயல்பொருந்திமலர் மாலைதாங்கிக்
குடமெனவேவயங்குகொங்கைப் பொதுமின்னாரைக்
கூடிவிளையாடிமனங் குறைவுறும

னடனமிடுமயின்முதுகி னடஞ்செய்சாமி
நாதன்மகிழ்வுறுதுணையை நயமாமின்பக்
கடமொழுகுங்கவுள்வதன மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (ரு)

இரதமவனியெனமதி பருதிவட்ட
வெழிலுருளையெனவரியம்பெனவேசெய்து
புரதகனமிடுகடவுடருமெஞ்ஞான
பூரணனையாரணத்துட்பொருளையின்ப
வரதருணகரகமல விபுலனைச்சின்
மயனைநயமுலவுமனு மயனைவாருங்
கரடமுகவாரணத்தைமேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (சா)

சுருதியென்றுங்காணவொண்ணு மணிவிளக்கைச்
சுடர்வடிவாயிலங்கியதத் துவத்தைவஞ்ச
விருவினைநோய்மாற்றவரு மருமருந்தை
யென்றனுயிர்க்குயிரான வினியபாகைப்
பொருதுகயமுகற்கொருவல் விடியைமேலாம்
புண்ணியனைப்பேரின்பப் புனிதவாழ்வைக்
கருதமரர்நாயகனைமேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (எ)

சிலையெனவேயணுவளவு மிரக்கமில்லாச்
சிந்தையொடுமாநிலத்திற் றிரிந்துவேடர்
வலையினிடையகப்படுமா னதுபோற்றுன்ப
வலையினிடைச்சிக்கிமனம்வருந்தினேற்கு

திவ்வியமகமேருவரை யனையமேனிச்
செழுஞ்சுடரைப்புலவர்குழாந் தினமன்பாற்செய்
கவிமலர்மாலிகைபுனைந்த மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (உ)

கனவிடையனவரதமு மனைவிமக்க
ணலந்திகழ்தாய்தந்தையென நயந்தெந்நாளுஞ்
சனனமெடுத்திறுமளவுங் கொடியதான
சாண்வயிற்றின்பொருட்டுலகிற்சஞ்சரித்து
மனமழலின்மெழுகினுரு காமலென்னை
மகிழ்ந்தாண்டமலர்த்திருமான் மருகன்றன்னைக்
கனவிமயமயின்மகனை மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (ங)

பந்தவினைத்தொடர்பகன்ற முனிவோரோதும்
பரஞ்சுடரைக் கருணைவிழி பாலித்தோங்குந்
தந்தநெடுங்கரவரத்தந் தாவளத்தைத்
தனிமுதலைக்கனிவினொடு தமியேன்முன்பு
வந்தருடந்திலகுபரா னந்தமான
வத்துவையென்மனவனச மலரின்மேவுங்
கந்தலர்ப்பதத்திறையை மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம் (ச)

மடமையெனுங்கொடியநெடு வலையிற்சிக்கி
வருந்திமயல்பொருந்திமலர் மாலைதாங்கிக்
குடமெனவேவயங்குகொங்கைப் பொதுமின்னரைக்
கூடிவிளையாடிமனங் குறைவுறும

னடனமிடுமயின்முதுகி னடஞ்செய்சாமி
நாதன்மகிழ்வுறுதுணையை நயமாமின்பக்
கடமொழுகுங்கவுள்வதன மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (ரு)

இரதமவனியெனமதி பருதிவட்ட
வெழிலுருளையெனவரியம்பெனவேசெய்து
புரதகனமிடுகடவுடருமெஞ்ஞான
பூரணனையாரணத்துட்பொருளையின்ப
வரதருணகரகமல விபுலனைச்சின்
மயனைநயமுலவுமனு மயனைவாருங்
கரடமுகவாரணத்தைமேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (சு)

சுருதியென்றுங்காணவொண்ணு மணிவிளக்கைச்
சுடர்வடிவாயிலங்கியதத் துவத்தைவஞ்ச
விருவினைநோய்மாற்றவரு மருமருந்தை
யென்றனுயிர்க்குயிரான வினியபாகைப்
பொருதுகயமுகற்கொருவல் லிடியைமேலாம்
புண்ணியனைப்பேரின்பப் புனிதவாழ்வைக்
கருதமரர்நாயகனைமேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (எ)

சிலையெனவேயணுவளவு மிரக்கமில்லாச்
சிந்தையொடுமாநிலத்திற் றிரிந்துவேடர்
வலையினிடையகப்படுமா னதுபோற்றுன்ப
வலையினிடைச்சிக்கிமனம்வருந்தினேற்கு

சிவமயம்.

# கொப்புடைநாயகி பதிகம்.

## காப்பு.

நேரிசைவெண்பா.

கதியுதவு கொப்புடையாங் கற்புடையாண் மேற்சொல்
பதிக நிறைவேறப் பண்ணுஞ்—சுதியான்
பெருமானை யானனத்தான் பெற்றிடா வின்பந்
தருமானை யானனத்தான் றாள்.

## நூல்.

தொண்டரிதயாரவிந்தங்களுக்கெதிரோ
துலங்குமீரிரவியென்னத்
தோன்றுமிருசரணமுங்கரடக்களிற்றின்
றுதிக்கையைமதிக்கநீண்டு
தண்டருவரம்பைநிகராகிமிருதுளமழகு
தழுவியவிரண்டுதுடையுந்
தமனியக்கொடியெனக்குடமுலைச்சுமையினிற்
றளர்வுபெற்றொருடியுமிடையுஞ்
செண்டினைமுனிந்திறுகுபந்தினையிகழ்ந்துயர்வு
திகழ்முலையுமுலையுமொவ்வாச்
சிறுநகையுநகைபூத்தசெம்பவளவிதழுமிதழ்
செறிகருணைபொழியுமுகமும்

நிலையெவருமிலையெனவுள் ளுணர்ந்தானந்த
நிறைகருணைமழைபொழிவெண்ணிறப்பைங்காரைக்
கலைகளோராறுந்துதிக்கு மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (அ)

பனகநெடுமணிமகுடச் சிரங்களாற்றுப்
பத்துமிருநான்குபருப் பதமும்பாந்த
வினமதெட்டுங்கரமலைக ளெட்டுந்தாங்கி
யெழில்கொழிக்குங்குவலையமு மிருவிசும்பு
தினமுமனமகிழ்வினொடு பரவியேத்துஞ்
செழுமறையுமழகுதுதி செய்யமன்றிற்
கனபரதநடனமிடு மேலவாவிக்
கற்பகவிநாயகனைக் கருத்துள்வைப்பாம். (௯)

நியமவழியதனைமறந் தந்தகார
நெருங்கியமாமோகவரு நெறியிற்சென்றம்
புயலனையகருங்குழலார் மீதிலாசை
பொருந்தியகம்வருந்தியற்ப போகந்துய்த்துத்
தயவணுவிலாதபெருங் கொடியராகித்
தரணிமிசைவீணாகத்தன்னாள்போக்குங்
கயவர்மனமிசையணுகா மேலவாவிக்
கற்பகவிநாயகனைக்கருத்துள்வைப்பாம். (௧௦)

கற்பகவிநாயகர்பதிகம் முற்றிற்று.

---

சிவமயம்.

# கொப்புடை நாயகி பதிகம்.

## காப்பு.

நேரிசைவெண்பா.

கதியுதவு கொப்புடையாங் கற்புடையாண் மேற்சொல்
பதிக நிறைவேறப் பண்ணுஞ்—சுதியான்
பெருமானை யானனத்தான் பெற்றிடா வின்பந்
தருமானை யானனத்தான் றாள்.

## நூல்.

தொண்டரிதயாரவிந்தங்களுக்கெதிரோ
துலங்குமீரிரவியென்னத்
தோன்றுமிருசரணமுங்கரடக்களிற்றின்
றுதிக்கையைமதிக்கநீண்டு
தண்டருவரம்பைநிகராகியிருதுளமழகு
தழுவியவிரண்டுதுடையுந்
தமனியக்கொடியெனக்குடமுலைச்சுமையினிற்
றளர்வுபெற்றொடியுமிடையுஞ்
செண்டினைமுனிந்திறுகுபந்தினையிகழ்ந்துயர்வு
திகழ்முலையுமுலையுமொவ்வாச்
சிறுநகையுநகைபூத்தசெம்பவளவிதழுமிதழ்
செறிகருணைபொழியுமுகமும்

வண்டணிநெருங்குகரகமலமுந்தோன்றநீ
வந்துவந்தென்னையாள்வாய்
வளமிகற்புதநன்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகோப்புடையம்மையே. (க)

உருகியொருபோதுமுனதுரியபுகழினையுளத்
துன்னிடாதரியதுன்பத்
தூடழுந்திக்கலியினல்வருந்தித்தளர்ந்
துடையும்வடிவுடையனுகித்
திருகுதாளஞ்செய்முழுமடையரொடுமனுதினஞ்
சேர்ந்துகளிகூர்ந்தடங்காச்
சிந்தையாற்பெரியவனாகிந்தையேசெய்துவெந்
தீவினைக்காளாகியே
பெருகுசனனுதியிலுழன்றிளங்கன்றெனப்
பின்வருங்காரியத்தைப்
பேணுதுநல்லறிவுதோணுதுதுள்ளுமிப்
பேதையேன்மீதிலடமாய்
வருமறலிதனையடர்த்தருளாவிடிற்சிறிய
மைந்தனெவ்விதமுய்குவேன்
வளமிகற்புதநன்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகோப்புடையம்மையே. (உ)

கதிபெறற்கைம்புலன்களையோரிடத்திலுங்
கடவாமலானந்தசா
கரமதிற்படிவம்பொருத்திமெய்யுணர்வாங்
கயிற்றினுற்கட்டிவாய்ந்து

பதிதருறவெல்லாமகற் றிவீணனவிப்
பாரவுடன்மீதுசற்றும்
பக்கம்வையாதுவெங்கானின்மலேமுழையிற்
பரிந்தேகிநின்றுமேலாந்
துதிபலவியற்றித்தவஞ்செய்பெரியோர்பணிம
தூரவசனசுகுணமயிலே
சுகவமிர்தசலசதளசத்ருசவிகசிதநயன
சுந்தரீயரிசோதரீ
மதின்மதியைமருவலாற்சிவனேநிகருங்காரை
மங்கையேகருணேபுரிவாய்
வளமிகற்புதநன்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகொப்புடையம்மையே. (ஙு)

வேடிக்கையாவற்பமனிதனைச்சேர்ந்துதுரு
விடயமேபழகிமோக
வெறிபிடித்தறிவுகெட்டனுதினந்திரியாசை
மேலிட்டுவிலேமாதனைக்
கூடிவீணுகவேவாணுட்கழித்தலங்
கோலமாய்மாநிலமெலாங்
குதிகால்வருந்தவெகுகதியாய்த்திரிந்துசாண்
கும்பிவேதனேயினுலே
மோடிசெய்கின்றமுழுமூடனைக்கண்டுசெகன்
மோகனுவிந்திராதா
மோதராவென்றுதுதியோதியேயாசக
முயன்றிடாவண்ணமருள்வாய்

வாடித்தளர்ந்துதேய்ந்தொசியுமிடைமின்னென்ன
வாய்ந்தசெழுமணிவிளக்கே
வளமிகற்புதான்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகொப்புடையம்மையே. (ச)

பொல்லாதசனனப்பெருங்கடலையறிவான
பொற்கலமதாற்கடந்து
போமளவிலூழ்வினைத்தொகுதிச்சரக்குப்
பொருந்தலாற்பாரமேறிக்
கல்லாமையானநங்கோரத்தினுலுமது
கட்டுண்டுமுடுகிவீசுங்
காற்ருந்தரித்திரத்தாலுமலைவுற்றுக்
களைக்கின்றதருணமோர்ந்துன்
சல்லாபபரிமளாலங்க்ருதபதாம்புயத்
தனிகலத்தேற்றியேயச்
சனனவாரிதியைக்கடத்தியடியேனையா
டருணக்கலாபமயிலே
வல்லார்ந்துவிம்மிப்படர்ந்துநயமிகுசக்ர
வாகங்கிர்முலையன்னமே
வளமிகற்புதான்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகொப்புடையம்மையே. (ரு)

சருதரியதியவெங்கலியினுற்கெடுமனங்
கவலையுற்றவமதிப்பாய்க்
காற்காசுமியாதமூர்க்கமானிடர்பேட்டி
கண்டரியதுதிகள்விண்டு

பெருவாரியாகப்ரபந்தவகைபாடியொரு
பிரயோசனங்களணுவும்
பெற்றிடாதெத்தேசகாலமும்வருந்திப்
பெருந்தீயின்மெழுகாகநைந்
துருகாதவகையெனக்குதவுமாகிதியமே
யொளியிலகுமணிவிளக்கே
யோங்குபேரின்பமழைபொழியவருமெழிலியே
யுன்னுதற்கரியபொருளே
மருவுலவுசெழுமலரிலெழுகமிர்தமேபெருமை
வாய்ந்தபூங்காவாழ்வே
வளமிகற்புதநன்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகொப்புடையம்மையே. (சு)

காயக்கிலேசமுஞ்செய்துவனமெல்லாங்
கடந்துகுதிகால்கடேயக்
காசினியெலாஞ்சுற்றிவந்தாலுமுனதுபத
கமலதரிசனமிலார்க்கு
ஞாயமாய்முத்திவீடெய்துவதுமேதுமெஞ்
ஞானமேதலகிலாவீ
ணுட்கழித்திடுவதல்லாதுயாதொருபயனு
நண்ணிடாரிந்தவாற்றாற்
சேயனாகியவெளியனின்பெருமையெவ்விதந்
தெரிகுவேன்காலனார்க்கென்
செய்குவேனெவ்வழியிலுய்குவேனுறுதிநீ
செப்பியெனையடிமைகொண்டு

மாயவெம்பிறவிதீர்த்துனதுபதநளினமேல்
வைத்தளிசெலுத்தியாள்வாய்
வளமிகற்புதநன்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகொப்புடையம்மையே. (எ)

சதகோடிபுவனந்தமிற்சனித்திடுசீவ
சங்கத்துளொன் றுமுணராத்
தமியேனுனடிமையெனவந்ததாலினியெனைத்
தள்ளலாகாதுதள்ளி
னிதமுனைத்தவிரவேறொருவர்துணையில்லையிது
நிசமானவசனமுன்ற
னெஞ்சறியலாம்பெற்றதாய்மகன்பிழைசெய்த
நீர்மையைமனத்துளேசந்
ததநினைந்திம்பரிற்றள்ளிவிடநீதியோ
தருமமோவாதலாலித்
ததியிலெளியேனைவந்தாண்டருள்குவட்டிளந்
தனமதாற்றளருமிடையாய்
மதனையோரக்கினிவிழிக்கிரையதாக்குமரன்
மகிழுவாதாடிநின்றோய்
வளமிகற்புதநன்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகொப்புடையம்மையே. (அ)

உனதுதிருநாமமதையோதியுணராமலே
யோயாதசனனமரணத்
துள்ளழுந்திக்கொடியபஞ்சமாபாதக
முஞற்றியெள்ளளவாகிலுங்

கனத்தையில்லாதசிறியோர்களுடனேசதா
காலமும்பழகியதனாற்
கக்கசப்பட்டுமனமுட்கியறம்விட்டுக்
கலங்கிமதிகெட்டடங்காச்
சினமுடையகடையனுயவனிமிசைவீணு
டினந்தினம்போக்கும்வஞ்சத்
திருடனேற்குக்கருணைசெய்திடாவிடில்வேறு
தெய்வமுண்டோகண்மணியே
வனம்ருதுளமதுரபரிமளநளினபதயுகள
மலர்பூத்தபசியகொம்பே
வளமிகற்புதநன்மை யிலகுகற்பினின்மெய்ம்மை
மருவுகொப்புடையம்மையே. (சு)

கற்பகத்தருவினின்முளைத்திரதமூறுசெங்
கனியேகனிக்குண்மதுவே
கரையிலாப்பேரின்பவெள்ளமேவெள்ளங்
கனிந்துதவுகருணைமுகிலே
விற்பகவளர்ந்தழகுயர்ந்தநுதல்வில்லியே
மிளிர்மருங்கொடிவல்லியே
விஞ்சையர்துதிக்குங்கலாபமயிலேமறை
விளம்பவொண்ணுதகுயிலே
தற்பரஞ்சுடரேயெனிடரொழித்தாண்டுதின
சரியுமனமொருமையாயுன்
றனையோதுமதியெனக்கருளாய்சமயமீது
தமியன்மேல்வருமமேது

மற்பொருதுமகிடன்முடியைப்பொடித்தனவரத
மணிமதிற்காரைமேவும்
வளமிகற்புதநன்மை யிலகுகற்பினின்மெய்மை
மருவுகொப்புடையம்மையே. (௧௦)

கொப்புடைநாயகிபதிகம்-முற்றிற்று.

---

சிவமயம்.

கொப்புடைநாயகி மும்மணிக்கோவையின்

# சாத்துக்கவிகள்.

---

இஃது

மழவைநகர் - மகாவித்வான்

ம-ா-ா-ஸ்ரீ

## சிதம்பரபாரதியவர்களியற்றிய

அறுசீர்விருத்தம்.

எம்மணிக்கோ வையுநிரத மெனவால சுப்ரமண்ய
வெழில்விப்ரோந்த்ரன்
மும்மணிக்கோ வையைக்காரைக் கொப்புடைய நாயகி
மேன் மொழிந்தான்விண்ணோ
ரம்மணிக்கோ வையமகிழ விசைத்தனனென் றதிசயி
ப்ப வனையிரண்டு
தம்மணிக்கோ வைப்பரப்பிக் கருணைபொழிந் திடவுல
கந் தழைக்கத்தானே.

---

இஃது

செந்நெற்குடி - மகாவித்வான்

ம-ா-ா-ஸ்ரீ

## சாமுக்குட்டி அய்யரவர்களியற்றிய

அறுசீர்விருத்தம்.

திருவிருக்கு மணிமாட நிறைகாரை யம்பதியிற்
றிகழ்தெய்வப்பூந்

தருவிருக்கு மலர்க்குழற்கொப் புடையாண்மேன்மும்
 மணிப்பூர் தாமம்வேய்ந்தான்
கருவிருக்கு முகிலனைய கரதலத்தா னுன்மறையுங்
 கமழுநாவா
னுருவிருக்கு மதனனையான் பாலசுப்ர மண்யனெனு
 முசிதன்றானே.

---

இஃது

வேம்பத்தூர் - சங்கவித்வான்

ம-ா-ா-ஸ்ரீ

## வெங்கடசுப்பையரவர்களியற்றிய

வெண்பா.

மன்னு கலையாக மந்தினங்தே டிக்காணுப்
பொன்னுமையா குங்கொப் புடையாடோண்—மின்ன
சோகமற்றும்வால சுபபி ரமணியமால் [வைத்தான்
வாகமரு மும்மணிக்கோவை.

---

இஃது

மேற்படியார் தம்பி

ம-ா-ா-ஸ்ரீ

## சுப்பையரவர்களியற்றிய

வெண்பா.

தேனுங் கனியுஞ் செழும்பாகுந் திங்கரும்புந்
தானத் தமுதுஞ் சரியாமா—ஞானமிகும்

பம்மணிக்கோ வைப்பழிக்கும் பாலசுப்பிரமண்ணியன்
மும்மணிக்கோ வைப்ரபந்த முன். [வின்

---

இஃது

புதுக்கோட்டை சமஸ்தானம்

ம - ா - ா - ஸ்ரீ

அருணசலம்பிள்ளையவர்கள் குமாரர்

சவளிக்கடை

நாராயணபிள்ளையவர்களியற்றிய

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

வெம்மணிக்கோவையும்பாரு மற்றுமின்று
வியந்துபுரந்தழிக்குமகா வீரமிக்க
நம்மணிக்கோவைகொள்கதி ரயிலாங்காரை
நகருறையுங்கொப்புடைநா யகிபொற்றாளின்
மும்மணிக்கோவையையியற்றி யணிந்தான்வேத
முற்றுமுணர்வாலசுப்ர மண்யமேலோன்
செம்மணிக்கோவவசியரான் மதிப்புண்டந்தச்
சீர்மணிக்கோவையைமதிக்கத் திறரியார்தாமே.

---

இஃது

ஷை சமஸ்தானம்-வித்வான்

ம-ள-ள-ஸ்ரீ

சுப்பிரமணியபிள்ளையவர்கள் குமாரர்

## மதுரைநாயகம்பிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

முப்புடைக்காய் மரச்சோலை சூழ்காரைக் குடியமர்ந்த
முதல்வியான
கோப்புடைநா யகிதாளிற் சுருதிகுரு சுவாநுபவக்
குறிப்புத்தோன்ற
வெப்புடையும் புகழ்வேத வாலசுப்ர மண்யவைய
ணிகத்திலியார்க்கு
மொப்புடைய மும்மணிக்கோ வைத்தமிழை மனமகிழ்
வா யுரைத்திட்டானே.

---

உ

கணபதிதுணை.

# கொப்புடைநாயகி

# மும்மணிக்கோவை.

காப்பு.

நேரிசைவெண்பா.

பொம்மணிக்காரைக்கொப் புடையாண்மிசைப்புகலு
மும்மணிக்கோவைக்குவந்தெம் முன்னிற்கு—மெம்மதக்கும்
மெய்யானவேழமதன் வேழுந்தனைத்துணிக்கு
மையானனன்சே யடி.

## நூல்.

அகவல்.

பூமலிகற்பகப் பொன்னகர்மடவார்
காமுறுமாயிரங் கண்ணனும்விண்ணவர்
விஞ்சையரியக்கர்தம் மெய்ம்மனையோடுவந்
தஞ்சலிசெய்தள வற்றபேறடைந்து
பொலியவுமார்கலி புடவையாப்போர்த்த
நிலமகடனைத்தோ ணிறுவியமன்னர்
தவலிலைசிலைபோற் றுனிமிர்ந்திம்ப
ருவமையிலாம லுனற்றுமாமுனிவரர்
மானிடரெவர்களும் வந்தடியிறைஞ்சித்
தேனிதழாரத் திரண்முலைமாதர்

போகமும்மிடிலாப் புகழுஞ்சிறந்த
யோகமுஞ்சேர்ந்தெழி லுற்றோங்குறவுங்
காரைமாநகரிக் காசினித்தலத்துட்
சீரதாமெனமகிழ் சிந்தைபூத்தமர்ந்த
கொப்புடையாள்கருங் கோகிலநயம்போற்
செப்பியபனுவற் செல்விமாதங்கி
முக்கணிநான்மறை முடிமிசைநடிக்குஞ்
செக்கரொண்மேனித் திரவியக்குன்ற
மினிக்குமோரருளா லெமக்கு
மனக்குறும்பகற்றி வானினோங்கியதே. (க)

வெண்பா.

ஓங்கலிரண்டுவெட்ட முற்றுயர்ந்துதெள்ளருவி
யாங்கிருபால்வார்ந்துசம னுவிருந்தாற்—பூங்காரைக்
கொப்புடையாண்மாலையணிகொங்கைக்கோர்வாறுவமை
செப்பலாநிச்சயமி தே. (உ)

கலித்துறை.

தேவாரப்பாவுந் திருவாசகமுந் தினந்தினமு
நாவாரப்பண்ணொடு பாடுநின்னன்பர்க்குநான்மகிழ்ந்து
பூவாசனங்கொடுத் திடேறச்செய்தருள் பொன்னகர்போற்
காவாருங்காரைக் கரசானகொப்புடைக் கற்பகமே. (ங)

அ க வ ல்.

கற்பமாகோடி காலந்தோறும்
பொற்பந்தனைய புணர்முலைத்திருவை

யுரமிசைத்தாங்கு மூவணகேதனனு
மருமலிதாமரை மாட்டினிதுறைந்த
நான்முகத்தேவு நகும்பிறைபோன்ற
பான்மருப்பேந்து பன்றியாய்ப்பூவை
யிடந்துமோதிமமா யெழுந்துவானெல்லே
கடந்துமீரடியுங் கதிர்ச்சடைமுடியுந்
தெரியாதேங்கச் செயுமழலுருவத்
துரியாதீதன் றுகளறநடிக்கு
நடத்தினுக்கொக்க நடிக்குமோங்காரியை
வடத்தினுமுறங்கு மாயவன்றங்கையைக்
காரறனிதம்பொழி காரைமாநகர்க்கோர்
கூரறமாவளர் கொப்புடையாளெனு
மாதியையன்ப ரகத்தெழுஞ்
சோதியைநாவாற் சொல்வதுபயனே. (௪)

வெண்பா.

சொல்லும்பரவைபுடை சூழ்காரைமாநகரிற்
புல்லும்பொருட்கொப் புடையாளை—யல்லும்
பகலுங்கருத்திடையே பார்க்குமவர்பாத
யுகளங்குறிக்குமென துள். (௫)

கலித்துறை.

உள்ளேனினையன்றி மற்றொருதெய்வத்தை யுற்பலத்தின்
கள்ளேருழும்பணைச்செந்நெற் குப்பாய்ந்திடுங் காரைநகர்
வெள்ளோதிமப்பெடை யேகொப்புடையென மேவுகிளிப்
பிள்ளாய்கருணை புரிந்துதந்தாளரும் பெற்றியையே. ()

## அகவல்.

பெற்றக்குழாம்பசுப் பின்றொடர்ந்தனபோற்
சுற்றியநீள்வாற் சுனகத்திரள்கண்
மட்டியாமுடுவன் மருங்குறல்போல
வட்டவார்முலைக்கண் மணிப்பணியணிந்து
கடையாபாரிகள் கனத்தநாட்கட்டுக்
கிடையாக்கிடக்குங் கேழிலாச்சேலையை
யிருள்வலியகலா விரவிற்கொள்ள
வருபவர்முன்னர் மடிப்புப்பிரித்துக்
காட்டுதல்போலிற் கடைத்தலையிருந்து
வேட்டுநர்களையுள் வீட்டுறக்கொடுபோ
யடிக்கடிகூறை யவிழ்த்துக்காட்டு
மடப்பிடியெனும்பொது மாதர்பாற்றொடரு
மூடர்களுறவை முன்னிடாதுனது
பாடகமலர்த்தாள் பரவுமெய்யன்ப
ரவைக்கணுற்றனையே யனுதினந்திக்குஞ்
சுவைச்சுதைபுகட்டித் துகளெலாநீக்கி
யாண்டருள்காரா யமர்ந்தபூங்குயிலே
தாண்டவம்புரியுந் தனிப்பசுமயிலே
நான்மறைவனத்து நடுவேயிருந்து
தேன்மழையெனமொழி செப்புபைங்கிளியே
யமையணிகொப்புடை யணங்கே
தமியனேற்குத் தஞ்சநின் சரணே. (எ)

### வெண்பா.

சரணம்புயந்தலைமேற் றாங்கினேன்றன்ப
மரணந்தமாற்றி மகிழ்ந்தேன்—கிரணம்
புலியைத்தொடுகோ புரக்காரையூர்க்கோ
யிலையுற்றகொப்புடைமா தின். (அ)

### கலித்துறை.

மாதாமகனை வளர்ப்பதுபோற்புவி மானிடர்க்கு
வேதாவிதியை விதிப்பதுபோலிந்த வேளைவந்து
நீதாகருணை யெளியேற்குக்காரை நெடுநகருக்
காதாரமாகிய கொப்புடையாயுன் னடைக்கலமே. (கூ)

### அகவல்.

அடையலர்புரமூன் றடைதரத்துன்பை
விடையினுக்கன்று விடைகொடுத்தருளுஞ்
சங்கரனொடுநடந் தானடித்தொளிரும்
பங்கமிலாச்செழும் பங்கயமலர்போற்
றாக்குநின்னொருதாட் டோற்றமெவ்வுயிர்க்கும்
வீக்கியவினையின் வேரறுத்தின்றே
யளவிலாவின்ப மடிக்கடிசுரந்து
தளர்வெலாமொழிக்குஞ் சாயுச்சியத்தைத்
தருவேமெனவணி சதங்கைப்பேரொலி
யொருவாய்ச்சொற்போ லுரையாநிற்பக்
காரைமாநகர்க்கிரு கண்ணுமவற்றின்
சாரமாய்மிளிருந் தாய்கொப்புடையாய்

நானதையறிந்து நவில்வினைத்தொடர்பா
லினமேபழகு மிதையத்தினனு
வறியேனுகியலைந்தே
னிறைபேரருளா னீயளிப்பாயே. (௧0)

வெண்பா.

அளியென்னுமன்ப ரகமருவப்பூத்து
மிளிரும்பதவனச மேலே—யெளியனகத்
தேனையையுந்தாங்கினுற் சேரும்புகழுனக்குக்
காரைநகர்க் கொப்புடைநங் காய் (௧௧)

கலித்துறை.

காயம்பசும்புற் றலைநீரதாமதிற் கண்டசுக
மாயும்பொழுததின் மீதுற்றநீர்விழு மத்தன்மைத்தா
நீயிந்தவாறறிந் திம்பரிற்காரையை நேடியங்காந்
தாயம்புயமலர்த் தாடுதிமாகதி சார்வதற்கே. (௧௨)

அகவல்.

சாராசாரந் தமையோதிமப்புண்
ணீராக்கறக்கு நின்மலப்பாலு
மொன்றுவிருத்தல்கண் டுண்டுடனிரை
நன்று்வொதுக்கிய நாகரிகம்போன்
முற்பதந்தழுவிப் பிற்பதநீக்கு
மற்புதபுராணிகர் சொற்பதமிசையோ
டிசைதரவிசைக்கு மெழின்மண்டபமு
மசைவறநின்றுல கனைத்தையுந்தாங்கும்

பொன்மலைகிர்கோ புரத்திருவாயிலும்
பன்மணிச்சரங்கள் பசுந்தேனூற்றும்
பூச்சரமோடு பொலிதரச்சுண்ணப்
பூச்சினிணொருநாற் புறச்சுவரொளியைக்
கக்கிடவன்பர் கணங்களிந்துருகிப்
பக்கலினின்றுதீம் பாசுரக்கவிக
டினசரிபடிக்கச் செவியிடங்கேட்டு
மனமகிழ்ந்தினிய வரமெலாமுதவித்
தனிவிலாச்சிங்கா தனத்திடைமயில்போற்
குணமுடனிருக்குங் கொலுமண்டபமுந்
திருத்தகுமறைவே தியர்சிறப்புடனே
யருச்சனையுஞற்றிடு மர்த்தமண்டபமு
மிருக்குவிப்பிரர்க்கே யேற்றதுபோலக்
குருக்கண்மாத்திரமே கூடுதற்குரித்தா
யருட்பெருஞ்சத்தி யடைந்தொளிர்கின்ற
கருப்பக்கிரகமுங் கலந்திடம்விரிவாய்த்
திகழாலயத்திற் சிறக்குமாமணியை
யிகமோரனைத்து மீன்றசிற்பரையைப்
பொற்புயர்காரையி லுற்பவித்தோங்குங்
கற்புடையாளெனுங் கொப்புடைத்தாயே
யகிலத்தெளியேற் காயிரங்கண்கண்
மகவான்போல வாய்ந்தாலலது
வெண்மையுஞ்செம்மையு மேலாங்கருமையுங்
கொண்முக்குணமாக் குலவிருவிழியாற்

கண்டுகளிக்கத் தக்கதோ
வண்டர்களுக்கு மரிதரிததுவே. (௧௩)

வெண்பா.

அதவ னவளாயு மன்றியுநின் றோங்கு
மதுரமொழிக்கொப்புடைய மாதே—பதுமமலர்
தேங்குமடுக்காரைத் திரவியமேநாயேற்காந்
தீங்குயடுத்தாளித் தினம். (௧௪)

கலித்துறை.

தினகருமீத்திரள் பற்பலபூத்தொறுந் தேனெடுத்து
மனங்களைந்திட்டியுண்ணுமற்பிறருண்ணவைப்பதுபோற்
றனஞ்செறிகாரையிற் கொப்புடைநாயகித் தாயடியார்க்
கனங்கொடுக்கார் செல்வமெல்லாமிழிந்தவர்க் காகிடுமே

அகவல்.

ஆகமமறைகளை யந்தணர்கூடி
யேகமாமுழக்க வெழும்பேரொலிவான்
மேகத்தொலியை விரட்டாநிற்பப்
பூகத்தருவைப் பொருசெழுங்களத்துத்
தையலர்வீணை தனைமுலையணைத்துப்
பையச்சேர்ந்து பாடும்பாட்டின்
சிற்றொலிமாவிற் செந்தளிரருந்திக்
குற்றமிலாமற் கூவுகோகிலத்தி
னொலிதனையடக்க வலகின்மாவளங்கள்
பொலிதருகாரை நிலவுதீங்கரும்பு

மொழிக்கிடைமொழிக்கிடை முதிர்சுவைசுரந்து
செழிக்குமாந்தினர்க்குத் தீப்பவந்துடைத்துத்
திரும்பாப்பரகதி சேர்க்குமெழிற்கோங்
கரும்பார்மூலைக்கொப் புடையாயென்னப்
பெயரும்பெற்றுப் பிறங்குந்
தயையாலென்னையுந் தனிபுரந்திடுமே. (௧௬)

வெண்பா.

தனிவேற் கரமுருக சாமிதனை யீன்ற
கனிவா யணங்கேபொற் காரை—நனிமேவல்
போலெனதுள் ளத்தும் புரையறநின் றுளெனக்குன்
காலலதுண் டோமெய்க் கதி. (௧௭)

கலித்துறை.

கதிர்வேற்கும்வாட்குங்கணைக்குங்கொலைத்தொழில் கற்றுவைத்துத்
திதியேதனக்கிட மாவடைந்தன்பர்க்குச் செல்வநல்கும் [
பதினுலுலகும் படைப்பதற்காத்ததி பார்த்துமலர்
விதிபோற்றுங்காரைநங் கொப்புடைச்செல்வி விழிக்கடையே

அகவல்.

கடைசியர்நெற்பயிர்க ளைகடோறுங்
குடவளையொதுக்கிக் கொழுங்களைகளைதற்
கொருங்குருனிந்தே யுற்றுப்பார்க்கக்
கருங்குவளைகண் மனைக் கண்மலர்மீது
நீரிற்றோற்றவின் னேமியிலிற்றைநாள்
வேரிக்கண்மலர் மிசைவேறொருமலர்
பூத்ததுகண்டிலேம் புதுமையீதெனவக்
காத்திரமுலையினர் கைத்தலமலரா

லெடுக்கவெடுக்க வெடுபடாமையினங்
கடுக்கும்வரப்பி னருகிடைச்சென்று
வரிசையினின்றுதம் மாலாலுண்மை
தெரிதரலின்றித் திருமுகங்கோட்ட
நிலத்திடையோர்பா னிற்கமுன்னிகழ்பூச்
சலத்திடையோர்பா றயங்கித்தோற்ற
முன்காண்பனபோற் பின்காண்கிலம்யா
மென்காரணமென் றிதயக்கலக்கந்
தெளிந்தறிந்தோங் திருமுகமென்றுட்
குளிர்ந்துதங்கொழுநனைக் கூடக்கருது
மாவளங்காவள மண்டியநீர்வளம்
பாவளந்திகழும் பாலைநன்னாட்டிற்
கண்களேயாகுங் கானைமாநகர்வாழ்
பெண்களுக்கரசியெப் பெற்றியுமுதவுந்
திருக்கொப்புடையென் சிந்தைக்கோயி
லிருக்குந்திப மிருண்மாயையினை
யொழித்தொளிபரப்பி யுலவா
வெழிற்பெருவீட்டிடை யென்னைவைத்திடுமே.()

வெண்பா.

வைப்போனெனதுவினை மங்காதநின்னருளே
பொய்ப்பான்மையில்லாப் புலிங்கமா—மெய்ப்பா
ரிடையுளாய்கானை யிடமருவுமன்ன
நடையுளாய் செய்திகருணை. (௨௦)

### கலித்துறை.

கருணைக்குரிய விவனல்லவென் றுட் கருதிலென்மே
லருள்வைத்துபகரிப் பாரெவரீதுண்மை யாதலினித்
தருணத்திலென்னைவந் தாண்டருள்காணாத் தனிநகர்வாழ்
வருணக்கலாப மயிலானகொப்புடை மாதங்கியே. (உக)

### அகவல்.

மாதந்தோறு மணிமதிற்காரை
வீதியினருகே விண்ணிடத்தமர
ரிந்திரனைச்சூ ழியல்பேபோலச்
சந்திரனைச்சூழ் தாராகணம்போ
லுனைமெய்யடிய ருறவாச்சூழ
வனையேயிரதத் தமர்ந்துநீபவனி
வருவேளையிலுன் மலர்த்தாள்பரவக்
கருதேனுகிக் கான்மரம்போல
நின்றேன்கனவி னிடையயர்ந்தேனுங்
குன்றேய்கொங்கைக் கொப்புடையாயென்
றுருக்காலுருகி யோதிலனெளியேன்
பெருக்கார்பிறவிப் பெருங்கடனீந்தும்
வகையெவ்விதமோ மனைப்பூ
நிகரும்பதமே நிதமுயிர்த்துணையே. (உஉ)

### வெண்பா.

துணையானகஞ்சவடித் தூளென்றலைச்சேர்
திணையிலாவெம்பவத்தை யெற்றும்—பணைவளத்தாற்

கொன்பொருள்சேர்காரைக் குடிக்கொப்புடையாளுக்
கன்புபுரிந்தாடுமெடி யார். (௨௩)

கலித்துறை.

ஆரங்கரும்பிடை யுற்றும்பரிற்புகு மற்றமைப்போர்
மாரன்பகைவெல்ல விற்பாவுருண்டையை வைத்தெய்தலே
நேருஞ்செறுவள நீடிருக்காரை நிகழுமையாள்
சீரும்பெருமையு நாவாற்றுதித்துச் செழித்தனமே. ()

அகவல்.

செழித்தெழுகிரணத் திங்களினமுகைப்
பழித்திடுமுகமலர்ப் பாவையர்க்கரசி
யெனும்பராகாரை யிடத்தினிதமர்ந்து
மனும்பராமற்றை மனிதரைத்தவரைப்
பூட்டியவினையிருள் பொடித்தொளிபரந்த
தாட்டுணையணைக்குந் தாய்கொப்புடையாள்
கண்ணேகடலக் கட்கடையுற்றுத்
தண்ணேகுலவித் தழைத்தபேருளே
யமுதமடைந்திடு மன்பரோவிண்ணோ
ரிமையளவேனு மிசைக்குமவ்வருளை
யடையாதாரோ யவுணர்
புடையார்கலிசூழ் பூவுலகிடத்தே. (௨௫)

வெண்பா.

இடராம்பனிக்கோ ரிரவியிருட்கப்பாற்
கடலாங்குதிக்குங் கதிர்சா—லுடன்மதியம்

பாணியினீண்மச்சம் படர்வானுகளனந்தங்
கேணிகளார்காரைக் கிளி. (உசூ)

கலித்துறை.

கிளிப்பரியான்றத்தை மேவவைத்தேபின் கிளர்சுகத்தைக்
கொளக்கொடுத்தான்பங்கிற்காவோங்குங்காரைக் குடியிலன்ப
ருளப்பெருங்கோயிலிற் சேருமின்றுளென் னுளச்சிறிய
தளிக்குளுஞ்சேர்ந்துதந் தாளடங்காவருட் சம்பத்தையே.(உஎ)

அகவல்.

சம்புவுமம்புவி தன்னையுண்டப்பா
லம்புதியார்ந்துறங் கண்ணனுங்கடவு
ளன்னத்துறையு மயனுமுத்தொழிலின்
மன்னக்கருணை வைத்தாண்டருளுந்
தலைவியாதலினற் சாக்காடென்னுங்
கொலைவரிப்புலிக்குட் குறைந்துநீயமருங்
காரைப்பதியிற் கதிர்மணிப்புரிசை
யூரைத்திங்களை யுறவளைந்தென்ன
வளையுந்தளிமுனம் வந்தேனிதையங்
களையாதந்தக் கடும்புலிகளைந்தே
யொப்புமையெவரையு முரையாச்செல்வக்
கொப்புடையாயுளங் குளிரக்குளிர்துங்
கிணைத்தாள்பரவு மெளியனை
யணைத்தாளன்னையு மப்பனும்நீயே. (உஅ)

வெண்பா.

அப்புடையாக்கொண்ட வகிலம்புகழ்காரைக்
கொப்புடையாயென்மேற் குறிப்புடையாய்-செப்புடையாப்
பந்துக்குங்கொங்கைகளின் பாரமுடையாய்மலையா
நந்துக்கந்தீர்த்தருளின் னாள். (௨௯)

கலித்துறை.

நாளுக்குநாட்செல்வம் பாற்கடல்போற்பொங்கி நல்லிசையே
நீளுத்தமத்திருக் காரைக்கண்ணுறுனை நேடிவந்தேன்
கோளற்பமேனு முருதருள்கோமளக் கொப்புடையாய்
வேளுக்குக்கோனல்கப் பற்பலபூமுடி வேய்ந்தவளே. (௩0)

கொப்புடைநாயகி மும்மணிக்கோவை
முற்றிற்று.

---

கணபதிதுணை.

# பொய்சொல்லாமெய்யர் பதிகம்.



காப்பு.

நேரிசைவெண்பா.

அய்யன்புகழ்க்காரை யாண்டவனென்னுண்டவனு
மெய்யன்பதிகம் விளம்புதற்குக்—கைய்யால்
விதிக்குமாதங்கம் விளைத்திடுஞ்சேயோர்காற்
றுதிக்குமாதங்கன் துணை.

நூல்.

கவினெழுகிவளரிளவெண் பிறையெனவேதுலங்குநுத
ற் கணிகைமாத
ரவிநயத்தாலதிமோக மடைந்துமனமுடைந்துவரு
மடியனேற்குத்
திவியநிறையடிக்கனுறுந் தெவிட்டாவிரதம்புகட்டுந்
திங்கரும்பைப்
புவிபுகழுமைந்தருவைப் பொய்சொல்லாமெய்யனையே
போற்றிவாழ்வாம். (க)

பரந்தவுலகங்களெங்கும் பசுங்கொடிகொம்பேறுதல்
போற் படருமுல்லைத்
தாங்கிகழும்பூரணைபுட் கலையினெடுமனுதினமென்
றனைவந்தாண்டு

வரந்தருதெள்ளமுதையன்பர் மனத்திருளைப்போக்கு
மொரு மணிவிளக்கைப்
புரந்தரனுதியர்பரவும் பொய்சொல்லாமெய்யனையே
போற்றிவாழ்வாம். (உ)

ககனமுகடுருவவரு பரியிலனுதினமேறிக்
கடவிச்சீர்த்தி
மிகவடைந்தகறுப்பனைத்தன் றிருவாயிற்காவலென
மேவுங்கோக
நகமலரங்கருமிரு பதத்தானைமதத்தானை
நடத்தினானைப்
புகலருமாதவப்பயனைப் பொய்சொல்லாமெய்யனையே
போற்றிவாழ்வாம். (௩)

வனிதையர்கணெடியவிழி வலைவீசிநயம்பேசி
மயக்குஞ்செய்கை
யினிதெனவுட்டேர்ந்தவரை யணைந்துடலமுலைந்தவர்க்
கே யேவல்கேட்டு
மனிதரில்வீண்பதராகத் திரிந்துவிடாதெளியனைத்தன்
வசமாக்கொண்டு
புனிதமுதவியகுருவைப் பொய்சொல்லாமெய்யனையே
போற்றிவாழ்வாம். (ச)

கருவிகரணாதிகளா யருமறைநான்காயகண்டா
காரமாகி
வருமிரவிமதியாகி யுபநிடத்தாயதன்பொருளாய்
வளர்மெய்ஞ்ஞான

குருவைவளாகிகர்கரியின் மீதேறியெனையடிமை
    கொண்டதேவைப்
பொருவிலுயர்பரஞ்சுடரைப் பொய்சொல்லாமெய்யனை
    யே போற்றிவாழ்வாம். (ரு)

அலகில்வினைத்தொடர்பதனு லுலகிடைவந்துதித்துவரி
    யளிகள்பாடு
மலர்சொருகுகருங்கூந்தன் மடந்தையரைத்தொடர்ந்த
    வர்கை வசமாயன்னோர்
கலவிமதுப்பருகிமன முருகுமெனையோர்நொடியிற்
    கலந்தாட்கொண்ட
புலவர்சிரோரத்னத்தைப் பொய்சொல்லாமெய்யனை
    யே போற்றிவாழ்வாம். (சா)

தேம்பொதிந்துததும்புகொன்றை யலங்கல்பரித்துரக
    மதைச் செவிமேற்பூண்டு
வாம்பொருவில்விடைநடத்து மலைமகணயகனுமலை
    மகளைச்சேர்ந்து
காம்பொருவாய்வைத்திசைக்குங் கண்ணனுமீன்றருள்
    கருணைக் கடலைவாசப்
பூம்பொழில்சூழ்காரைநகர்ப் பொய்சொல்லாமெய்யனை
    யே போற்றிவாழ்வாம். (எ)

கவனமொடுகெல்விகற்றுக் கடத்தேகிக்காலமெலாங்
    கழித்திவ்வாழ்விற்
றவனமின்றித்தவமியற்று முதுமறையோர்க்கருடரவங்
    தானைத்தேனை

யெவனவெழிற்பூரணைபுட் கலைமகிழச்சேர்ந்துதகி
யேழுஞ்சூழ்ந்த
புவனமெலாமின்றளித்த பொய்சொல்லாமெய்யனையே
போற்றிவாழ்வாம். (அ)

இளவொளியைங்கருமெழிற் பணிகளணிசசிதனைக்காத்
திருள்போன்மேனி
வளமுடையவசமுகித விருகரத்தைத்துணித்துதிரம்
வழியச்சிந்தை
தளர்வுறச்செய்வித்ததயா நிதியையெனதிதையமலர்த்
தடத்திலென்றும்
புளகிதமோடமர்பொருளைப் பொய்சொல்லாமெய்யனை
யே போற்றிவாழ்வாம். (௯)

கதியுதவியெனையாண்ட கற்பகத்தைமறைகளுமங்
கமுங்காணுத
நிதியைமுன்னூறிகழகலத் தானைமுதியோனையடி
நினைக்குந்தொண்டர்
மதியைவிடாதமர்கருணை வாரிதியையோரிரண்டு
மாதர்மாந்தும்
புதியசெழுந்தெள்ளமுதைப் பொய்சொல்லா மெய்யனை
யே போற்றிவாழ்வாம். (௧0)

பொய்சொல்லாமெய்யர்பதிகம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

பொய்சொல்லாமெய்யர் நான்மணிமாலையின்

# சாத்துக்கவிகள்.

இஃது

வேம்பத்தூர் - சங்கவித்வான்

ம-ா-ா-ஸ்ரீ

வெங்கடசுப்பையரவர்களியற்றிய

கலித்துறை.

வான்மணிக்கோவை யமுதோவெனும்படி
வண்கரத்திற்
பான்மணிக்கோவை யமர்மாதொடுங்கும்
பனுஙிகர்சி
மான்மணிக்கோவை யனவாலசுப்பிர
மண்ணியவே
ணன்மணிக்கோவை பொய்சொல்லாமெய்யர்க்கு
நவின்றனனே.

இஃது
மழவைநகர் - மகாவித்வான்
ம-ா-ா-ஸ்ரீ
சிதம்பரபாரதியவர்களியற்றிய
விருத்தம்.

பான்மணிமாலையவளையாள் செழுங்கமலையாள்வெட்கப்
பரனுமாலுந்
தான்மணிமாலையுங்காட்டித் தந்தபொய்சொல்லாமெய்ய
ன் றனக்குப்பூண
நான்மணிமாலையைப்புனைந்தான் றிவிப்புலவர்புவிப்புல
வர் நயந்துகேட்பத்
தேன்மணிமாலையத்திசைத்தார் மனைவாலசுப்ரமண்யச்
செம்மன்மாதோ.

---

இஃது
புதுக்கோட்டை சமஸ்தானம்
ம - ா - ா - ஸ்ரீ
அருணசலம்பிள்ளையவர்கள் குமாரர்
சவளிக்கடை
நாராயணபிள்ளையவர்களியற்றிய
எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தேன்மணிமாலைக்கூற்று நகைகேசத்தாற்
செயம்பெற்றமோகினியா வடிவங்கொண்டு
மான்மணிமாலைக்கொடுக்கப் புணர்ந்தனுதி
மகிழ்ந்தருளும் பொய்சொல்லா மெய்யர்க்கன்பாய்

வான்மணிமாலையைச்சிதைக்க வரவிள்ளுந்தா
மனைத்தாரான் வாலசுப்ரமண்யன்செய்யு
நான்மணிமாலைக்கிணையா யியற்றவஞ்சி
நாமகளும் அங்கமலம் நண்ணினளே.

---

இஃது

ஷை சமஸ்தானம்-வித்வான்

ம-ள-ள-ஸ்ரீ

சுப்பிரமணியபிள்ளையவர்கள் குமாரர்

## மதுரைநாயகம்பிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மறம்பயிலிவ்வுலகிலுள மானிடர்கண் மனமயக்கத்
தால்வெவ்வேறு
புறுங்குரம்பையடையாமல் வாலசுப்ரமண்யமறை
யோனுங்குன்னித்
திறம்பயினன்மணிமாலைபொய்சொல்லா மெய்யருக்குச்
செய்தானத்தை
யறம்பொருளின்பம்வீடு முதவிடுநாற் கருவியென
வறையலாமே.

---

இஃது
சென்னை இராயபுரம் - வித்வான்
ம-ா-ா-ஸ்ரீ
வெ. கி. நாராயணசாமிபிள்ளையவர்க ளியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

முந்நீரோ முடையுடுத்த வவனியிடைக் காரைநகர்
முன்னிவாழும்
பொய்ந்நீர்மை யில்லாமெய் யனுக்கோர்நான் மணிமாலை
புனைந்துதந்தான்
செந்நீர்மை வழிநின்று மறைமநுவா லெச்சங்கள்
செய்யுநீரான்
மெய்ந்நீர்மை குன்றுநம் வாலசுப்ர மண்யனெனு
மேதக்கோனே.

சாத்துக்கவிகள் முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

# பொய்சொல்லாமெய்யர்

# நான்மணிமாலை.

---

காப்பு.

வெண்பா.

பான்மணக்கும்வாய்மெய்யப் பன்மேற்பகர்கின்ற
நான்மணிமாலைக்குவர நல்குமே—வான்மலைமின்
றந்தவத்தியானை தாலின்றியாளரனர்
தந்தவத்தியானையிரு தாள்.

## நூல்.

வெண்பா.

மணிசேர்தளியை மதில்சுற்றச்சுற்று
மணிசேர்மதிலை யகழி—பணியினின்றருள
சுற்றவொருகாரைக்குட் டோன்றிவளர்மெய்யாவென்
குற்றமெலாந்தீர்த்தடிமை கொள். (க)

கலித்துறை.

கொள்ளுக்குக்காணமென்றோர்பெயர்வைத்திடுங்கொள்கையி
னுள்ளிப்பரிமுதன் மாவாய்பிளந்தெதி ரோடுமென்றால் [ளெ
விள்ளற்கரியமெய்க் காணத்தைநேருறின் மேதினியோர்
தள்ளிச்சகிப்பர்கொல் லோகாரைமெய்ய தயாநிதியே. (உ)

### விருத்தம்.

நிதியாசையிறுதிவைத்த காரணத்தையோர்கிலது
நேமியுள்ளார்க்
கதியானவிறுதியையுண் டாக்குதலினல்லவோ
வாதலாலென்
மதியாங்குற்றுழலாது முன்னிரண்டுந்தழுவாது
மலர்த்தாளீவாய்
நதியாற்சூழ்வயல்விளைக்குங் காரைமெய்யாநின்னைமெய்
யா நம்பினேனே.

### அகவல்.

நம்புதலொன்று நரலையால்வளைந்த
வம்புவிமானிட ரனுட்டிப்பாரேற்
போகமுஞ்சமனுப் புசித்தாடவரை
மோகவாரிதிக்கண் மூழ்கவும்வீழ்த்துக்
காசும்பறிக்குங் கனதனத்தியர்பால்
மாசுற்றிடவே வைக்குநம்புதலை
யிலக்கங்கூறிட் டெடுத்தொருகூறை
யலக்கணுமிருட்கோ ரவிர்கதிர்ப்பருதி
நிரையுண்டோங்கிய நீனிறக்கொண்டல்
காரையம்பதிக்கொரு கற்பகதாரு
வையந்தீர்த்தடி யார்க்கமுதளிக்கு
மெய்யன்பதமிசை விரிநதிமணன்மீ
தூர்தருநத்தை யுணர்வாலன்றி
யோரிவிரியி னெழுத்தெழுதுவபோ

லொருக்கால்வைப்ப ருடனே
யிருக்காலெட்டா விடத்தமர்வாரே. (௪)

வெண்பா.

அமரங்கிரந்தநிலைக் காதாரந்துய்ய
தமனியமிப்பூவினர்க்கா தாரங்—கமலமலர்த்
தையலர்நடம்புரியுந் தண்காரைமேவியசீர்
மெய்யனெனக் காதாரமே. (௫)

கலித்துறை.

மேகத்திற்றேன் றியமின்னற்கொடிகொடிமேற்படர்ந்த
நாகத்திற்பாய்ந்தொளிர்ந்தோடவிற்காரை நகர்தனிற்றம்
பாகத்திரண்டுகொடிவைத்தமெய்யனெப்பாரினுக்கு
மாகத்தனுமவனல்லாதுண்டோதுணைமானிடர்க்கே. ௬

விருத்தம்.

மானிடச்சட்டகமொருவற் கமைதலரிதநிலூன
மருவாச்சன்மந்
தானரிதுசிறந்தகல்வி மானரிதுமோனநிலை
சார்ந்தஞான
வானரிதுமணிக்காரை மாநகரைச்சேர்ந்துய்வி
வானுங்காத்த
கோனெமதுமெய்யனடிக் காளாவோனரிதரிதிக்
குவலயத்தே. (௭)

அகவல்.

குவலயவனநீர்க் குளநிறைந்தனபோ
லவயவமொருங்கு மலர்விழிபோர்த்த

தேவனாயகன்வச் சிரப்படையேந்தி
மூவுலகாள முறையாயவனி
மாக்களை மனுநூல் வழிபிசகாமற்
காக்கத்தென்பாற் கடவுளின்னணமா
வுற்றிடுமேல்வை யுலகினல்லவர்பாற்
சற்றுநெஞ்சிரங்காச் சடாமுனிமுதலாம்
பேய்க்கணநிறைந்து பேசுதற்கமையா
நோய்க்கண்மானிடரை நுணங்கப்புரியுந்
தகியமிந்தின்னாட் சார்ந்தளித்திலமேற்
கதிவேறிலையெனக் கண்ணியங்கரை
நகர்க்கண்விற்றிருந்தெண் ணாகமேற்சுமக்குஞ
சகத்திடையவரைத் தளர்விலாச்செங்கோல்
செலுத்தியாண்டருளுந் திறற்கோவிழிவா
முலுத்தர்கடமக்கு முயர்வாமறைக்கு
மெட்டாதோங்கு மியல்பினன்பிரபை
விட்டோர்கொழித்து விரைகமழ்மெய்ய
னுமமுமெய்யனம் பாத
பாமரனேற்கருள் பாலித்தனனே. (அ)

வெண்பா.

பாலலேயைப்பூசை பருகிவற்றச்செய்திடுமென்
மூலடியேன்மாயைவெல்லு மாண்மையுள்ளேன்—சேல
கட்பூரணைபுட் கலேதுய்ப்பக்காரைவைப்பிற் [னைய
பெட்போடுதித்தகரும்பே. (கூ)

கலித்துறை.

கருக்குழிவீழ்ந்து தளராதுனைநிதங் காப்பவர்க
ளிருக்கொலிகாணா நகர்மெய்யனன்றி யெவர்நகம்போற்
பருக்குமென்கொங்கையர்மோகக்கண்மாந்திப்பவவனத்தே
மருட்கொண்டலைந்தரியாண்டிகைச்சிக்குமனக்குரங்கே

விருத்தம்.

குரக்குருவக்கொடிபடைத்த விசையனுக்குப்பாசுபதங்
கொடுத்தகோவு
மரக்கருயிர்க்கவதியுறச் சக்கரமேந்தியகோவு
மன்னுட்காணா
புரக்கவருமெய்யனையெம் புண்ணியனையின்றிலரோற்
புவியின்மேற்சுந்
தரக்கலைகளிருமூன்றுஞ் சதுமறையுமாகமமுந்
தழைத்திடாதே. (கக)

அகவல்.

தழைவிரிகொன்றைத் தருக்குலஞ்சினைதொறும்
விழைதருமலருறீஇ விட்புகுந்தோற்றம்
பொன்னுடைளிக்கும் புரந்தரன்கொலுமுன்
பன்னுணிருத்தம் பயிலரம்பையர்க்கு
விறற்றருவேந்தும்வாய் விட்டாலலது
குறிப்பறிந்தியுங் குணமுடைத்தன்றெனத்
தேர்ந்துதங்கரத்தாற் றீதிறம்போல
வார்ந்தொளிர்பொற்கா சளித்தளித்திபவர்

பெருமையைக்காட்டும் பெரும்புகழ்க்காரை
வருமளிக்கடலான் வடிவமுங்கடலான்
பொய்யுரைபகராப் புண்ணியன்மண்ணோ
ரய்யனென்றுரைக்க வளிக்குமேற்கடவுண்
முன்னான்முயன்ற தவத்தாற்
றன்னுளாக்கித் தாளுநல்கினனே. (௧௨)

வெண்பா.

நல்குரவிற்சற்று நலியாமனற்பெரியோ
ரொல்கவெறும்புன்சொ லுரையாமற்—பல்கலையின்
சாரமேகாரைத் தனிமெய்யனேயருளின்
னேரமேநானெளியோ னே. (௧௩)

கலித்துறை.

எளியேன்பிறவிக் கடனீக்கிமேவிடத் தேற்றுவதுன்
னளியேயல்லாற்றுணைவேறுளதோபுவியாண்டருள்பைங்
கிளியோரிரண்டமர் பா லுடையாயிளங் கேசரிபோற்
றுளிமாற்றலரைவெல்காரைமெய்யாவொளிர்சூலத்தனே

விருத்தம்.

சூலமுங்கைக்கொண்டெனையாள் வேலையுங்கைக்கொண்
டுதநி சூழுமேழு
ஞாலமுங்கைக் கொண்டுசெங்கோ னடவுமெய்யன் கா
ரையையென் னுளநீங்காச்
சீலனன்பரிதையமரை மலர்விரியவெழும்பரிதி
சிந்திப்போர்கள்

காலமுண்டகொடும்பாவ மிருளுதிக்கவொளிக்கவவை
கண்டேன்யானே. (கரு)

அகவல்.

கண்டகர்தமாது காற்சங்கிலியு
முண்டகநாளமு முறையொவ்வேமென்
றுரைத்தலேமான வுடல்சுருண்டேங்கத்
திரைப்புனல்வீழ்ந்து தினந்தினஞ்சலிப்ப
வண்டொழுங்கேபோல் வயிற்றிடைச்செவ்வன்
கொண்டவுரோமக் கொடிகரும்பாம்பாச்
சற்றேசரிந்த தனமிருபடமாக்
கற்றூரணிமுலேக் காம்போரிரண்டு
மெயிருவடைந்தாங் கெய்திளேஞேரைப்
புயமேற்கடிக்கப் புரிவித்தவர்மால்
சேர்ந்துடல்சோரச் செய்மிருருறவைத்
தீர்ந்துநின்ரெண்டர் சேர்க்கைநான்மருவி
மகிழுமாறினிய வரமருள்வானு
நிகரிலாக்காரை நின்றமெய்ம்முதலே
பூவையுங்குயிலும் புறத்தே
மேவச்சுகமா வீற்றிருந்தோயே. (கசு)

வெண்பா.

இருந்தான் றிருக்காரை யேறினன் றும்பி
விருந்திட்டான்றன்படைக்கு வெய்ய—திருந்தாரை
மாற்றினனென்பிறவி மாலரன்சேயானவரு
ளாற்றினனீற்ரெளிமெய் யன். (கஎ)

கலித்துறை.

மெய்யோதிமெய்வழி நின்றுமெஞ்ஞானத்தை மேயினர்பா
லய்யோவென்சிந்தைசெல் லாதிலைநேரல்கு லாருமையிற்
சய்யோகமாகின்ற தெவ்வாறுய்வேன் றிருத் தானநன்னீர்
செய்யோடிப்பாயும்விற் காரைமெய்யாதஞ்சஞ் சேவடியே.

விருத்தம்.

சேவகர்நான்மருங்குமுறத் திருக்காரைமாமறுகிற்
திறற்கால்வீசி
மூவுலகுமோர்நொடிக்குட் செலும்பரிமேற்பவனிவரு
முதல்வனேமெய்க்
காவலனுஞ்சதனுண்மை மிளகறியு மதனேவிலை
கட்டுவோனுங்
கோவிலிடைப்பூசைபுரி மானிடனுந்தாமுணர்வர்
கோலைக்கண்மாதே. (கசு)

அகவல்.

மாதுளங்கனியு மணமாங்கனியுங்
கோதிலாதிலகோர் கொடிக்கட்சனித்த
தெனமணிக்காயத் திணைமுலைவாய்ந்து
வனமுனிவோரெவ் வனமிலாரெனினும்
பார்வையான்மோகப் படுகுறிப்பாய்ச்சுந்
தார்விராவியகூந் தற்பொதுமடவார்
விழிவலையும்மை விடேனெனச்சலவ
மொழிவராலுண்ணு முயற்சியிற்றிரியச்
சனனவாரிதியிற் சஞ்சலம்பயக்குஞ்
சினமதாமடங்காச் செழுந்திரையூடுற்

றெழூஞ்சிறுமீன்க ளெனும்புன்மனிதக்
குழாங்களுளொருவனுக் கூறுதன்மையுளே
னுயினுமுன்பிதா வன்றுசுந்தரனைத்
தாயினுமுவந்து தடுத்தாண்டதுபோல்
வலியவந்தெனையாள் வாய்மணிப்புரிசை
யொலிமயமெனுநபத் துறலாலண்டச்
சுவரினைக்கடுக்குந் தோமிலாநளினத்
தவனெனுந்தவனன் றண்ணியவமுதக்
கலையாற்றடுக்குங் காட்சியால்விந்த
மலையேநிகர்க்கு மாளிகைக்காரை
நாயகாபொய்யிடை நங்கையர்மருங்கு
மேயினுமெய்யை விடாப்பெருந்தகையே
யய்யனேசூல மணிந்த
கைய்யனுவுலகைக் காத்தருண்முதலே. (உ0)

வெண்பா.

முதலேசருக்குழியின் முட்டுதலாற்பூவின்
மதலையாவந்தபின்னு மாதர்—சிதலைநிக
ரல்குற்குழியினுமுற் றுவிநொந்தேனீயருள்செய்
பல்கலைச்சீர்க் காரைமெய்யப் பா. (உக)

கலித்துறை.

பாமணக்குந்திருக் காரைப்பதிக்குப் பதியெனுமெய்க்
கோமணக்கும்பெண் கொடியிரண்டார்கொழுகொம்பம்புகா
ரீமணக்குண்டல மாவோனவனையெத் தேவுமொக்கி
லாமணக்குந்தெய்வப் பூந்தருவோர்டொக்கு மாரணங்கே. உஉ

விருத்தம்.

ஆரணன்போன்முப்போதும் பல்போதுமன்பினெடுத்
தருச்சிக்கின்ற
சிரமரும்பூசாரிக் குயர்வுறுமட்சிருட்டிவித்தை
தெரித்துமேலாம்
பாரதியைநாவிருக்கும் படிசேர்த்திப்படிபுகழப்
பண்ணுங்காரை
பூரரசேமெய்யனல்லா ருனுடலான்மெய்யனென
வுரைக்கலாமே. (உகூ)

அகவல்.

உரைப்பாலுரைப்பா ருரைப்பவையெல்லா
மிரப்பார்க்கொன்றீ வார்மேனிற்கும்
புகழெனவள்ளுவர் புகன்றநூற்கிணங்க
வகிலமேற்பரிமே லழகர்வாய்மலர்ந்த
தோர்ந்துமுணரா வுலுத்தரைமேன்மை
சேர்ந்தகுமுணருச் செப்பியுமழகு
குடியுறுமூரிற் குடியிரான்றன்னை
வடிவுளமாரன் மகவாவுரைத்து
மொருகாசேனு முற்றிடாதுலகிற்
றிரியுங்கல்வித் திரரோயுமது
புன்மதிநீக்கிப் புவிமதிக்கின்ற
தன்மதியாகன்வித் தாரமாமதிபோன்
முகத்தானொருமெய் முகத்தான்காரா
யகத்தானடிய ரகத்தான்பதுமப்

பதமேற்பாடல் பலவும்
பதமாவுளாத்துப் பதம்பெறுவீரே. (உச)

வெண்பா.

பெறுமவற்றுள்யாமறிவ தில்லையறிவறிந்த
மக்கட்பேறல்ல பிறவென்—றுறுதியதா
வள்ளுவனார்வாய்மலர்ந்த வாறருள்செய்நாற்புறமும்
பள்ளியமர்காளையில்வேம் பா. (உரு)

கலித்துறை.

வேம்பனென்றோர்திரு நாமமுமோர்பெயர் மெய்யனென்றும்
வாம்பரிமேற்ப வனிவரும்போதிலென் மாட்டுரைத்துப்
போம்பதியாரெனக் கேட்டேற்குக்காளைப் புரத்திலகு
பாம்பன்வழியதென் ராமனுக்கோடியும் பார்த்தனனே. (உகூ)

விருத்தம்.

பார்ப்பதியோர்பங்குடைய பசுபதிநாடொறுமடியார்
பங்கிற்றீங்கைத்
தீர்ப்பதினிதாகுமெனத் தேர்ந்துதிருப்பதிவளர்மால்
சேயாந்தங்க
வார்ப்பதிமோகனக்காளைக் கதிபதிமெய்ப்பிரபுகவி
வாணர்கூறுஞ்
சீர்ப்பதிகம்புனைபுயத்தி னனுளைக்கும்புன்கவியுஞ்
சேர்த்தான்மாதோ. (உஎ)

அகவல்.

சேராரியமற் சேர்ந்தவராகக்
கூரார்முத்தலை கொண்டவெம்படையாற்

செய்யுமொருதுரைச் சிங்கங்காரை
மெய்யன்சுருதி வேழமீதேறு
நாயகன்மறுகே நலங்கிளர்பவனி
மேயினகாலையில் விண்ணவர்சாதி
மல்லிகைப்பூக்களை வாரிச்சிதறல்போ
லெல்லியில்விட்பா லெண்ணருந்தாரகை
பொடித்தனசிதரும் பூக்களில்வெள்ளைக்
கடிச்செழுங்கோக னகப்புதுமலரோன்
திருந்துபொலிந்தா லென்னப்
பொருந்துமதியும் பூத்திலங்கியதே. (உஅ)

வெண்பா.

இலக்கமுணர்வரிதா மென்பவமெய்யாவுன்
றலக்கருளுமவ்வாறே தோன்றுந்—தலத்திலுயர்
காரைவருமெய்யாவிக் காரணத்தாற்காத்திடவென்
னேருறனின்மீது கடனே. (உகூ)

கலித்துறை.

கடனந்துகண்டங் கடிகொண்டகஞ்சங் கரங்கறுத்த
விடமென்றவேல்விழிப் பூரணைபுட்கலை யின்றழுவுரு
சடலம்பயோதரந் தண்ணளிதாரையத் தாரைபொழி
யிடமன்பர்காரை வருமெய்யனென்னு மிறைவனுக்கே.

விருத்தம்.

இறையளவுமெய்யடியார்க் கிகத்திலுதவியைப்புரியா
திருக்குமாந்தர்

நின்றவளஞ்சேர் குருபூமி யிடத்துயர்ந்தகுலத்துதித்து
நின்றானுங்
கறைபொருந்துமதியாடி யெனமாடிமிசையெவர்க்குங்
காட்டுங்காரை
யுறையரன்மாலருண்மகவா மெய்யனையோர்கணமுமன
த் துன்னார்தாமே. (௩க)

அகவல்.

தாமோதரனுஞ் சங்கரத்தேவு
நாமோதியபொன் னகரொனுங்காரைப்
பதிமெய்யனையுட் பரிந்துபெற்றதனு
லதிருங்கடல்சூ ழவனிமேற்றருமப்
பயிரும்பயிராற் பலனுஞ்
செயிர்தீரணங்கே செழித்தொளிர்ந்தனவே (௩உ)

வெண்பா.

ஒளியாலிருணீங்கு மோங்குஞ்சுழற்றீ
வளியாற்பஞ்சோடியுரு மாயுந்—தெளிவாகச் [பூ
சொல்லவைபோற்காரைவைப்பிற்றேன்றுமெய்யன்றாமரைப்
மெல்லடியாற்போமே வினை. (௩௩)

கலித்துறை.

வினையாற்சுகதுக்க மிவ்வுடற்காமவ் வினையொழிந்தாற்
பினையோர்கணமுமெய்நில்லாதம்மெய்யினைப்பேணியின்ப
மனையாக்குடிகொண்ட சிவனுங்காரை வளம்பதியிற்
றனையாருமேத்தவளர்மெய்யன்பொன்னடிசாருவனே.

விருத்தம்.

சாரங்கங்கண்சுழற்றுஞ் சாடைநடியெனவுரைப்பச்
சரணுற்றேரைகை
நீருண்டதண்டலையூ டாடுதனட்டுவனுற்பொன்
னிகழரங்கிற்
காரொன்றுங் குழற்பரத்தை நடித்ததன்மையினைக்கா
ட்டுங் காரைநாட்டின்
பேரண்டமுறமருவு மெய்யனையல்லாதென்வாய்
பேசிடாதே. (ருடு)

அகவல்.

பேசுங்கிளிமேற் பிரியம்வைக்கின்ற
மாசிலாராச மங்கையேபோலு
மொருமுறையுரைப்ப வுபசிடதார்த்தந்
தெரிவுறுமதிமான் சிடன்மீதி
லன்பைச்செலுத்து மாசான்போலுந்
துன்பக்கருவிற் றளையாவண்ணஞ்
சரியைமுன்னுன சதுட்டயமடைந்த
பெரியவர்மீது பிரியம்வைத்திடலுன்
கடமையானுலுங் கடையனுமெனைக்கை
விடுதலுமுனது மேன்மைக்கழகலச்
சொற்றெரியாத சுகத்தையுங்கல்வி
கற்றிடாமானுக் கனையுமன்னேர்க
டள்ளிவிடாரத் தகைபோல
வெள்ளுதலின்றி யெடுத்தாண்டருள்வாய்
சிங்காரத்தின் செருக்ககலாத
கொங்கார்காவிற் குயிலெனுஞ்சின்ன
மழைத்திடவந்தே யனங்கனடங்கா

மழைத்துளிபோன்மது வைப்பெருக்கியசீர்க்
கணையுந்தனுவுங் கண்டுகண்டெடுத்தே
யுணையாத்தவர்மிசை யுய்த்தும்பரிக்கை
பண்ணியாரிடத்தும் பார்க்கலாமென்னத்
திண்ணங்கொண்டு செலும்பரிசுடைய
மாவளக்காரை மன்னிய
சேவகனெனமெய்ச் செல்வநாயகனே. (நசு)

வெண்பா.

நாயகனீநானடிமை நந்தாப்பயோததிநீ
பாயவதின்மோண்டுகொள்ளும் பாத்திரநான்-றூயமறைக்
கெட்டிலனேகாரையிடத் தியார்க்குமெளியவனே
நெட்டிலைவேல் வேம்பனைய னே. (நஎ)

கலித்துறை.

வேங்கடத்தென்னையவ் வத்தியினின்றும் விலக்கிவழி
போங்கடல்வண்ண னொருகாரைமெய்யன் புயங்களென்னு
மோங்கலின்மாலை புனைவேனல்லாதிங் கொருவருக்கு
மாங்கலியங்கட்டிக் கொள்ளேனெனைப்பெற்ற மாமயிலே.

விருத்தம்.

மயிலுருவமயிலுருவஞ் செவ்வரிக்கண்கொவ்வையிதழ்
மங்கைமார்கண்
டுயிலுமிடங்கோயிலதைச் சுற்றுதல்பிரதக்கணமத்
தோகைநல்லார்
குயமிரண்டுமிலிங்கமதாக் கும்பிடுவேற்குனதுதிருக்
கோலங்காட்டி
நயமுதவுநாளுளதோ காரைமெய்யனெனவரு
ணாட்டத்தானே. (நகூ)

### அகவல்.

நாட்டியதரும நறுங்கொடிவானிற்
சேட்டிளம்பரிதியைச் சேர்ந்திருகவர்வாச்
செய்துமேற்புனைந்த சிரையையசைத்துப்
பொய்தவழிடையம் போருகத்திருவொடு
பாற்கடலுதித்த பனிமதிமண்டில
மேற்கொளல்வாலை விசைகொடுபுவியி
லூன்றிவானளவு முடலினைநீட்டித்
தோன்றியசுடர்களைத் தோன்றாராகப்
பண்ணுமோர்நொடிக்குட் பண்ணியிவ்வுலகிற்
சொன்னசொற்றவறாச் சோதிடர்யாரு
மிருகிரகணங்க ளிதுவரையொன்றா
வருவதையறியே மாயமீதென்ன
மலைக்கவிராகு வளரிருநாவை
யலைத்துவிழுங்கு மற்றங்காட்டுங்
காரைப்பதியான் கருதார்க்கருளாஞ்
சிரைப்பதியான் திங்களும்வெள்ளியுந்
தன்னாலயத்தைத் தரிசனஞ்செய்பவர்க்
கன்னாளேமட் டடங்காச்செல்வமு
மாயுளும்யோகமு மறிவுஞ்சிறந்த
சேயரிலெண்மருஞ் சித்திகள்பலவு
முதவுந்தியாக னுயர்ந்தவைபோக
னிதபரிபாக னெறியின்மிருந்தேகன்
மெய்யனென்றுலகோர் விளம்பு
மெய்யனென்விழியு ளமர்ந்தமாமணியே. (௪0)

பொய்சொல்லாமெய்யர் நான்மணிமாலை
முற்றிற்று.

---